Registered No. M. 2330 'SIDDHANTHAM'
Vol. 32—No. 4



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 32 | விகாரி சித்திரை 1959 ஏப்ரல் | இதழ் 4

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.
உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## திரு. ம. பா. நினைவுநாள் விழா

5-4-59 மாலை 6-மணிக்கு ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையில் திரு ம. பா. நினைவுநாள் விழா கொண்டாடப் பட்டது. கூட்டத்திற்குச் சென்னை மாநில இந்து அறநிலையங் களின் ஆணையர் - உயர் சைவத்திரு. உத்தண்டராம பிள்ளை அவர்கள், பி.ஏ., பி.எல்., ஐ. ஏ. எஸ். தலைமை வகித்தனர்.

திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை பி.ஏ., எல்.டி. அவர்கள் ம. பா. அவர்களின் அறிவு நலத்தைப்பற்றிப் பேசினார்கள். திரு. சி நடராச முதலியார் பி.ஏ., பி.எல்., அவர்கள் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்களின் பண்பு நலத்தைப்பற்றி யும், திரு. ச. சிவகுமரன் எம்.ஏ. அவர்கள் அவர்களுடைய பணிநலத்தைப்பற்றியும் புகழ்ந்து பேசினார்கள். அதுபோது அவர்களது நினைவின் நிலையான அடையாளமாகச் சமாசத்திற் குக் கட்டிடம் கட்ட நன்கொடையாக ரூ. 6000/- அளிக்க மனமுவந்து முன்வந்த அன்னாரின் மருமகனார் - உயர்பெருந் திருவினர்-மணலி திரு. S. இராமகிருஷ்ண முதலியார் பி.ஏ. அவர்களுக்கு நன்றிநலப் பாராட்டுரையினைச் சமாஜத் தலைவர் திரு. நல். முருகேச முதலியார் பி. ஏ. அவர்களும், சமாஜச் செயலர் திரு வீ. இராமலிங்கம் எம். ஏ. அவர்களும் வழங் கினார்கள்.

உயர் திரு. உத்தண்டராம பிள்ளை அவர்கள், திரு. மணலி. S. இராமகிருஷ்ண முதலியார் அவர்கள் தாமே முன்வந்துதவிய பெருந்தன்மையையும், அன்னாருடைய உயர்ந்த பண்பாடுகளையும் பற்றிப் பாராட்டிப் பேசினார்கள். திரு. மா. ப. தியாகராஜன் பி.ஏ. அவர்கள் நன்றியுரை நவிலக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

---

## பிரிவாற்றுமை

பெருஞ்சொல் விளக்கனார், முதுபெரும் புலவர். திரு. அ. மு. சரவண முதலியார் அவர்களை அறியாதார் சைவத் தமிழுலகில் ஒருவரும் இரார். நாடறிந்த - நாவன்மை மிக்க- நல்ல சைவத் தமிழ்ப் பெரும் புலவர் அவர்! பெரிய புராண விரிவுரைகள் நிகழ்த்துவதில் அவர்கள் தனிச்சிறப்பும் ஒப்

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாளியை உள்நாடு

மலர் 32 | விகாரி சித்திரை 1959 ஏப்ரல் | இதழ் 4

## சிவஞான சுவாமிகள்*

சிவஞான சுவாமிகள் மெய்கண்டார் கழகத்தினர்க்கு மிகவும் இனிய பேராசிரியர். மேலும் அவர் காஞ்சிபுரத்தோடு மிக்க தொடர்புடையவர். காஞ்சிபுரத்தில் சிவஞான சுவாமிகள் பல ஆண்டுகள் தங்கி வாழ்ந்துள்ளனர். சுவாமிகள் இயற்றி யளித்துள்ள அரும்பெறல் நூல்கள் பலவற்றுள்ளும் பெருஞ் சிறப்பு மிக்கொளிரும் சிவஞானபோதப் பேருரை, காஞ்சிப் புராணம், தொல்காப்பியச் சூத்திர விருத்தி போன்ற நூல்கள், அவர்கள் காஞ்சிபுரத்தின்கண் வதிந்துகொண் டிருந்த பொழுதே அருளிச் செய்யப்பெற்றனவாகும் என ஆன்றோர்கள் கூறுவர். இவ்வியைபுகள் பலவும் கருதியே, எனைத் துணையோ விரிவுடையதாய் அரிய பெரிய பொருளாதல் உணர்ந்து வைத்தும், "கான முயல் எய்த அம்பினில் யானை பிழைத்த வேலேந்தல் இனிது" என்றதனை உள்ளி, இத்தலைப்பிற் பேசுதற்கு இசைந்து துணிந்தேன்.

முன்னுரை

சிவஞான சுவாமிகள் இற்றைக்கு ஏறத்தாழ 175 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தருளிய பெரும் புலவர்.

*காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகத்தின் சார்பில், திருவேகம்பநாதர் பங்குனி யுத்தரப் பெருவிழாவில், புலவர் முருகவேள் B.O.L. (Hons)., M.O.L. அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு. (21-3-59)

புலமை நலத்திற்குரிய துறைகள் எத்துணையுண்டோ, அவைகள் எல்லாவற்றினும் சுவாமிகள் பெருந்திறம்பெற்றவராவர். இலக்கணம் இலக்கியம் தருக்கம் உரைநடை மொழிபெயர்ப்பு கவிதை ஆராய்ச்சி மறுப்புரை என்னும் இன்னோரன்ன பலவற்றிலும் சுவாமிகள் ஒப்புயர்வற்ற பெருந்தகையாளர். சுருங்கக் கூறுமிடின், சுவாமிகளைப் பல்கலைக் குரிசில் (Versatile Genius) எனவும், புலமை வல்லாளர் (Intellectual Giant) எனவும் கூறுதல் பெரிதும் பொருந்தும். உரையாசிரியர்களிற் சேனாவரையரைப்போலச் சிவஞானசுவாமிகள் தாமும் "வடநூற் கடலை நிலைகண் டுணர்ந்தவர்" என்பதனை அவர் தம் நூல்கள் நன்கினிது விளக்குகின்றன.

சிவஞான சுவாமிகள் சிறப்பு

"கல்வி தறுகண் இசைமை கொடை எனச் சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே" எனத் தொல்காப்பியனார் சுட்டிய பெருமிதம் நான்கனுள் தலைசிறந்த கல்வி பற்றிய பெருமிதத்துக்கு உரியவர் நம் சுவாமிகளே எனலாம். "வல்லான் வகுத்ததே வாய்க்கால்" என்பதற்கேற்பத் தம் கல்வி வன்மையால் எக்கொள்கையினையும் நிறுக்கவும் மறுக்கவும் வல்லவர் அவர்! 'கம்ப ராமாயண முதற் செய்யுட் சங்கோத்தர விருத்தி' இலக்கண விளக்கச் சூறாவளி' முதலிய நூல்கள், சுவாமிகளின் இத்தகைய கல்வி வல்லமையினை விளக்கும் நல்ல பெருஞ் சான்றுகளாக அமையும். தூய தவ முனிவர்களாலேயே என்றும் நின்று நிலவும் பேரிலக்கியங்களை இயற்றுதல் இயலும் ("It is only a great seer who can produce a great literature" —Sir S. Radhakrishnan) எனப் பேரறிஞர்கள் பலரும் கூறுதற்கேற்ப, நம் சுவாமிகள் 'தவத்தால் மனந் தூயராய் இறையருள் பெற்றே' உயர் சிவஞானபோத நூற்கு உரைகண்டாராதல் வேண்டும். "அன்பெலாம் ஒரு பிழம்பெனத் திரண்டவர் கண்ணப்பர்" ஆதல்போல, அறிவெலாம் ஒரு பிழம்பெனத் திரண்டவர் சிவஞான முனிவர் எனக் கூறின், அது மிகையாகாது. திருஞானசம்பந்தர் போலச் சிவஞான சுவாமிகளும் 'ஞானத்தின் திருவுருவம்' ஆயவர்

என்றலிற் பிழையில்லை. சுவாமிகளின் அரும்பெரும் புல மைத் தொண்டுகளால் நம்மனோர்க்கு விளைந்த நலங்கள் அளந்துகூற ஒண்ணுதனவாகும்!

அறிவதறியாச் சிறுபருவத்தே "சிவஞான சுவாமிகள்" என்னும் பெயரையாதல் யான் ஓரளவு கேட்டுணரத் துணை செய்தவை, இக்காஞ்சிபுரத்திலுள்ள ஞானியார் சங்கமும், மெய்கண்டார் கழகமும், இவற்றின் சார்பில் ஸ்ரீலஸ்ரீ ஞானி யார் சுவாமிகள் முதலினோர் ஆற்றிய சொற்பொழிவுகளுமே யாம். ஒருமுறை ஞானியார் அடிகள், "திருக்கோயில் இல் லாத திருவில் ஊரும்" என்னும் தனித் திருத்தாண்டகத் தின் பொருளைத் தமது சொற்பொழிவின்கண் விரித்துரைத் தார்கள். அதுபோது அதன்கண் வரும் "அடவிகாடே" என்னும் தொடரினை விளக்கப்புகுங்கால், ஈண்டு அடவி என்றோ அல்லது காடு என்றோ ஒன்று கூறியிருந் தாலே அமையுமாக, இரண்டும் கூறியது சிவஞானபோதத் துள் "இவ்வான்மாச் சகச மலத்தினல் உணர்வின்று; அது தான் ஞான திரோதகமாய் மறைத்துக் கொடுநிற்றலான்" எனக் கூறப்பெற்றது போல்வதொரு முறைமைபற்றியாகும் எனக் குறிப்பிட்டு, "மலத்தினது இலக்கணம் வடமொழி வழக்குப்பற்றிக் கூறுவார் ஞானதிரோதகமாய் எனவும், அத னைத் தமிழ் மொழியான் விளக்குவார் மறைத்துக் கொடுநிற்ற லான் எனவும் கூறினாராகலான், அது கூறியது கூறலன்மை யுணர்க" எனவரும் சிவஞான சுவாமிகளின் உரைப் பகுதி யையும் எடுத்துக்காட்டி விளக்கிய நிகழ்ச்சி, மிக இளைஞனாக இருந்த என் நெஞ்சகத்தில் அழுந்தப் பதிந்து, இன்றளவும் நேற்று நிகழ்ந்த செயல்போல நிலைபெற்று நிற்கின்றது. சிவ ஞானசுவாமிகளின் சிறப்புக்களைச் சிறியேன் உணர்ந்துகொள் ளத் துணைபுரிந்தவை இன்னோரன்ன நிகழ்ச்சிகளேயாம்.

ஞானியார் சுவாமிகள்

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின்கண் யான் புலவர் வகுப் பிற் பயின்றுகொண்டிருந்த காலை, இந்நூற்றாண்டில் தமி ழகத்தின் தலைசிறந்த புலவர்களுள் ஒருவராகிய நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் ஐயா அவர்களின் திருவடிக்கீழ்

**நாட்டார் ஐயா**

அமர்ந்து பாடங்கேட்கும் அரும்பெறல் வாய்ப்பு அவ்வப் போது கிடைத்துவந்தது. ஒருமுறை அவர்களின் தலைமை யின்கீழ்க் கரந்தைத் தமிழ்ச்சங்கப் பேரவையின்கண் ஆராய்ச் சித் திறன் மிக்க அறிஞர் ஒருவர் "சங்கத் தமிழ்" என்னும் பொருள் குறித்துச் சிறந்ததொரு சொற்பொழிவாற்றினார். அது காலை, அச் சொற்பொழிவாளர், சங்ககாலப் புலவர்கள் இயற்கைப் பொருள் நுண்ணுணர்வில் எத்துணைச் சிறந்து விளங்கினர் என்பதனை விளக்கச் சங்க நூல் களினின்று பல சான்றுகள் எடுத்துக் காட்டிவிட்டு,

"ஞாஅ ளித்திடு பாவையைக் கோங்குபொன் கொடுத்துப்
பாரைப் பாடலம் பூந்தழற் பாங்கரின் மணப்ப
மாமரத்துளர் வண்டுபண் பாடவன் முருங்கை
விராவி வெண்பொரி இறைத்திடும் வியப்பின தொருபால்"

என்னும் பாடல் ஒன்றைக் கூறி, இப்பாடலைப் பாடியவர் பிற் காலப் புலவர்களுளெல்லாம் தலைசிறந்த பெரும்புலவர் என நமது தலைவர் அவர்களைப்போன்ற பலராலும் பாராட்டப் பெறுபவர்—இப்பாடலும் பாலை நிலத்தினை மிகச் சிறந்த முறையிற் கற்பனை நலந்தோன்ற மிகவும் அழகுறத்தான் விளக்குகின்றது—ஆயினும், இயற்கைப் பொருள்களைக் குறிக்கொண்டு நோக்கி நுனித்துணரும் நுண்ணுணர்வு வாயாமையால், இப்பாடல் எத்துணையளவு பிழைபட்டுள் ளது? எனப் பார்மின்கள்! மரங்களிலேயே எளிதாக உடைந்து ஒடிந்துவிடக் கூடிய மென்மை மிக்கது முருங்கை மரமே யன்றே? அதனை இப் பெரும்புலவர் வன்முருங்கை எனப் பாடியுள்ளனரெனின், வேறு பிறிது யாது கூறுவ துளது? என எள்ளற்குறிப்பு அமையப் பேசி முடித்தார். அவர் எள்ளியது சிவஞான சுவாமிகளை. எடுத்துக் காட்டியது காஞ்சிப் புராணப் பாடலை. சொற்பொழிவாளரின் மேற்கோட் பொருத்தத்தினைச் சுவைத்து அவையினர் அனைவரும் வியந்து கைகட்டி மகிழ்ந்து நின்றனர். அந்நிலையில், தமது தலைமைப் பின்னுரையை நிகழ்த்த எழுந்த நாவலர் நாட்டார் ஐயா

அவர்கள் சொற்பொழிவாளரையும், சங்கத் தமிழின் சிறப்பையும் ஏற்ற பெற்றி இனிது பாராட்டியுரைத்துவிட்டு, முருங்கையின் இலை பூ காய் பட்டை சாறு முதலிய பலவும் மக்கட்குப் பயன்படும் சிறப்புடையனவாதலின், வண்முருங்கை என ஆசிரியர் பாடியிருக்கற்பாலதனை, வன் முருங்கை எனப் பதிப்பித்தாரின் அச்சுப் பிழையாக இருக்கலாம் என ஆராய்ந்துணராமல், சுவாமிகள் திறத்திற் பிழை ஏற்றியுரைத்தல் நம்மனோர் பிழை பாடேயாகும் எனத் தெளிவுறுத்தி, அதனையொட்டிச் சிவஞானசுவாமிகளின் பலதுறைப் பெருஞ் சிறப்புக்களையும் புகழ்ந் தெடுத்துரைத்துப் புலங்கொளத் தெருட்டிய செயல், எம்மோரனைய தமிழ் மாணவரையும் அவையினர் அனைவரையும் வியப்பும் விம்மிதமும் மேலிட்டு நிற்க இன்பம் விளைவித்தது.

இங்ஙனமே, ஆசிரியர் மறைமலையடிகளார் சிவஞான சுவாமிகள்பாற் கொண்டிருந்த பேரீடுபாட்டினை, அவர்பால் நெருங்கிப் பழகி நேர்முகமாக அறிந்துகொள்ளும் வாய்ப்புக்கள் எளியேற்குப் பலகாற் கிடைத்தது. தமிழ்ச் சிவஞான போதம் வடமொழிக்கண்ணுள்ள இரௌரவாகமத்தினின்று மெய்கண்டாரால் மொழிபெயர்க்கப் பெற்றது என்னும் குறிப்பு அமையச் சுவாமிகள் எழுதியிருப்பதனை, அடிகளார் உடன்படாராய் மிக உரமாக மறுத்துரைப்பது வழக்கம் எனினும், அதுபற்றி அடிகளார்க்குச் சிவஞான சுவாமிகள் பால் இருந்த ஈடுபாடு ஒரு சிறிதும் குறைந்ததில்லை. தூய தனித் தமிழ்ப் பெயர் வழக்கில் மிகக் கருத்தும் விருப்பமுமுடைய அடிகளார்பால், ஒரு சமயம் துரைசாமி என்னும் பெயர் குறித்து வினவியபோது, "துரை என்பது ஒரு வகையில் தூய தனித் தமிழ்ச்சொல்லே ; 'துர' என்னும் பகுதிக்குச் 'செலுத்து' என்பது பொருள் ; ஏனையோரைச் செயல்களிற் செலுத்தி ஏவல் கொள்பவன் துரை எனப்படுவான். மேலும், ஆசிரியர் சிவஞான முனிவரர்,

மறைமலை யடிகள்

"அரசனும் செய்வ தீசன் அருள்வழி; அரும்பா வங்கள்
தரையுளோர் செய்யில், தீய தண்டலின் வைத்துத் தண்டத்

நுரைசெய்து தீர்ப்பன்; பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்!
நிரயமும் சேரார்! அந்த நிரயமுன் நீர்மை ஈதாம் ''

எனவரும் சிவஞான சித்தியார் செய்யுளுரைக்கண் 'துரை-மிகுதிப்பாடு' எனக் குறித்து, அதனை வலியுறுத்தும் சான்றாகத் 'துரைமாண்ட வாபாடித் தோள் நோக்கம் ஆடாமோ' என வரும் திருவாசகத் திருமொழியினையும் மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார்'' என்று இளைஞர்கள் சிலரிடையே தெரிவித்த செய்தி, அடிகளார் சிவஞான முனிவர்பாற் கொண்டிருந்த பேரீடுபாட்டையும், அவர்தம் நூல்களிற் பெற்றிருந்த அழுந்திய பயிற்சியையும் புலப்படுத்தி இறும்பூதும் இன்பமும் எய்துவித்தது. இவ்வாறே சபாபதி நாவலர், சோமசுந்தர நாயகர் போன்ற மாபெருஞ் சைவத் தமிழ்ச் சான்றோர்கள் அனைவரும் சிவஞான சுவாமிகள்பாற் பெரும் பத்திமை பூண்டொழுகி யுள்ளனர் !

சுவாமிகளின் இத்தகைய பெருங்கல்வி வல்லமையினை யெல்லாம், அவர்தம் நூல்களைப் பலகாலும் பயின்றுணர்ந்து இன்புற்ற பாண்டித்துரைத் தேவர் அவர்கள், பின்வருமாறு அழகுறப் பாராட்டிப் பாடுகின்றார்: கல்வியிற் பெரிய சுவாமிகளை உயிர்களிற் பெரிய யானையாக அவர் உருவகம் செய்கின்றார். ஆயிரம் படைவீரர்கள் சேர்ந்தாலும் யானை ஒன்றின் முன் நிற்கலாற்றாமைபோல, எத்துணைப் புலவர்கள் கூடினராயினும், அவரெல்லாம் புலமைத் துறையில் முனிவரரின் முன் நிற்கலாற்றார் என்பது கருத்து. இங்ஙனம் சுவாமிகளைப் புலமை யானையாக உருவகம்செய்த தேவரவர்கள், யானைக்குரிய இயல்புகளெல்லாம் சுவாமிகளுக்கும் அமையக் கூறுகின்றார். கடலிற்றிளைத்தல், பாச (சங்கிலி)த் தொடர் அறுத்தல், தறியை வீழ்த்துதல், தருக்களை அகழ்ந்தெறிதல், முகபடாம் அணிதல், இருமருங்கும் மணிகள் ஒலிப்ப வருதல், மதம் பொழிதல் முதலியன யானைக்குரிய இயல்புகளாகும். எனவே, ''சிவஞான சுவாமிகளாகிய யானையும் கலைதேர் நமச்சிவாய குரு கருணைக்கடலில் திளைத்தாடுகின்றது; உலகப் பற்றுகளாகிய சங்கிலித் தொடரை

பாண்டித் துரைத் தேவர்

அறுத்தது; அதற்குப் பற்றுக்கோடாகிய காமமாகிய தூணை விழும்படி செய்தது; உலகமாகிய பொழிலிடை நுழைந்து ஆண்டுள்ள பல்வேறு சமயங்களாகிய மரங்களையும் அசைத்து அடிவேரோடு அகழ்ந்தெறிந்து ஆராய்ந்து மறுத்தொழித்தது; இறைவனின் திருவருளுணர்வையே முகபடாமாக அணிந்து நின்றது; வேதம் ஆகமம் என்னும் பொது நூல் சிறப்பு நூல்களாகிய இருதிற மணிகளும் முழங்கச் ‘சைவசித்தாந்தம்’ என்னும் மதநீரினைப் பொழிந்துகொண்டு, பெருமிதமாக உலகம் முற்றும் வெற்றியோடு சுற்றி உலாப் போதருகின்றது” என்னும் அழகிய கருத்து அமையக் “கலைதேர் நமச்சிவாய குரு கருணைக் கடலில் திளைத்தாடி” எனவரும் பாடலாற் பாராட்டிப் பரவுகின்றார். சுவாமிகளின் ஒப்புயர்வற்ற பெரும் புலமைப் பெற்றியினை, இதனினும் சுவைபடப் பிறிதெவ்வாறு புகழ்ந்துபோற்றுதல் இயலும்?

சுவாமிகள், இளம்பூரணர் பேராசிரியர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் பரிமேலழகர் அடியார்க்கு நல்லார் போன்ற பழைய உரையாசிரியர் பெருமக்களின் வரிசையில் ஒருவராக விளங்கும் தலைமைப்பா டுடையராகத் திகழ்கின்றார். உரையாசிரியர்களின் சிறப்பு இனையது என்பதனைக் “கண்ணைக் கெடுப்பர் கவிராயர் அக்கண்ணை, எண்ணி உரைகாரர் ஈவாரே - மண்ணின்மேல், ஆக்குபவரோ அழிப்பவரோ மேலாவார், நோக்கி நீ நன்றே நுவல்” என வினவி நகைச் சுவைபடக் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் எளிய இனிய முறையில் விளக்குவர். இம் முறையிற் கருதுமின், சுவாமிகளின் உரை நலங்கள் மிகப் பலவாம். ஆயினும் தாலிபுலாக நயம் பற்றி அவற்றுள் ஒரு சிலவற்றை மட்டும் ஈண்டுச் சுட்டிக் காட்டுகின்றேன் :

உரை நலங்கள்

சிவஞானபோத அவையடக்கப் பகுதியின் உரையுள் புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னும் பாகுபாட்டுள் அடங்கி நிற்கும் பல்வேறு சமயக் கொள்கைகளையும் சுவாமிகள் சுருக்கமாகவும் தெளிவாகவும் தொகுத்தெடுத்துரைத்து விளக்கி யருள்கின்றார். அஃது அவர்தம் நுண்மாண் நுழைபுலத்தினைக்

காட்டுவதோடு, நம்மனோர்க்குப் பெரிதும் நலம் பயக்கின்றது. கூறப்படும் பொருளும், அதன்கண் ஐயப்பாடும், அதற்குப் பிறர் கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபும், இயைபும் என்னும் இவற்றின் நெறிமுறை சிறிதும் பிறழாமற் சுவாமிகள் சூத்திரப் பொருள்களை நுண்ணிதின் விளக்கிச் செல்கின்றார். "அருவுருவந் தானறிதல் ஆயிழையாய் ஆன்மா" எனவரும் சிவஞானபோத வெண்பாவின்கண் 'ஆயிழையாய்' என்பதனைச் சிலர் மகடூஉ முன்னிலையாகக்கொண்டு அமைந்துவிட, நம் சுவாமிகள் "நுணுகிய நூல்களை ஆராய்வதாகிய உயிர்" எனப் பொருள்கொண்டு, அதற்கு விளக்கமும் பொருத்தமும் காட்டியிருத்தல் ஈண்டுச் சிறப்பாகக் குறிப்பிடற்பாலது. மேலும், இங்ஙனம் விளக்கிச் செல்கின்றுழி, சுவாமிகள் தாமே பல தடைகளைக் கிளந்தெடுத்துக்கொள்ளும் திறமும், அவையிற்றை மறுத்துரைத்து விடைகூறும் திறமும் பிறவும், கற்பார்க்குக் கழி பேரின்பம் பயப்பனவாம்.

இங்ஙனமே, சிவஞானசித்தியார் சுபக்க உரையுள், "அறுவகைச் சமயத்து ஓர்க்கும் அவ்வவர் பொருளாய்" எனவரும் செய்யுட்கண், மங்கலவாழ்த்திற்கு இலக்கணமாகப் பன்னிரு சூத்திரப் பொருள்களையும் தம் வித்தகம் தோன்றத் தொகுத்துக் காட்டியுள்ள சிறப்பும், அதனோடும் அமையாது அதனினூங்கும் சென்று, அச்செய்யுட்கண் போந்த அறுவகை வினைஎச்சங்களானும் முறையே இறைவனது அறு (எண்) வகைப் பண்புகளையும் தமது சதுரப்பாடு புலப்பட விளக்கியிருக்கும் அருமையும், கழிபெருஞ்சுவை பயப்பனவாம். இவ்வாறே "மறையினால் அயனால் மாலால்" எனவரும் செய்யுட்கும் எளிதிற் றெரியும் பொருளையே யன்றி, ஆகுபெயர் பற்றிக் கொள்ளத் தகும் பொருளையும் சுவாமிகள் விரித்துரைத்து நம்மை மகிழ்வுறுத்துகின்றார். மாயையின் இலக்கணம் கூறுவதாக "நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய்" எனவரும் செய்யுட்கண், மாத்தியமிகர் கணிகர் உலோகாயதர் வைசேடிகர் சாங்கியர் பாற்கரியர் சிவாத்துவிதர் மாயாவாதர் முதலினோரை மறுத்தற்பொருட்டு, ஒவ்வொரு தொடரும் அமைய

நேர்ந்ததன் இன்றியமையாச் சிறப்பினைச் சுவாமிகள் விளக்கியிருத்தல், நவில்தொறும் நூல்நயம் பயக்கின்றது. எனவே, சுவாமிகளின் அரிய பெரிய விரிவுரைகள் கிடைத்திலவாயின் நம்மனோர்க்குச் சைவ சித்தாந்தம் பயிலுதல், "கடலைக் கையால் நீந்தினன் காரியம் போல்வதே"யாக முடிந்திருக்கும்!

இம்மட்டோ! சுவாமிகள், மிகச் சிறந்த மறுப்புரையாசிரியரும் மொழிபெயர்ப்பு ஆசிரியருமாகத் திகழ்கின்றார். சுவாமிகள் இயற்றியுள்ள சித்தாந்தமரபு கண்டன கண்டனம், எடுத்து என்னும் சொல்லுக் கிட்ட வைரக் குப்பாயம், சிவசமவாதவுரை மறுப்பு, சங்கோத்தர விருத்தி போன்ற நூல்கள், சுவாமிகளின் மறுப்புரை வன்மை மாட்சியினைத் திறப்பட உணர்த்துவனவாகும். மாற்றார் மனந்தைக்க மறுப்புரை எழுதுதலில் சுவாமிகள் மிக வல்லவராவர். "தமிழ் வியாகரணம் இருந்த மூலையும் கண்டறியாது, தமிழ்க் காவியங்களையும் கேட்டறியாது, தமிழ்ப் பதங்களையேனும் பயின்றறியாது, தமிழ் நூலுக்குரைசெய்தும் என்று நீர் ஆரம்பித்துக்கொண்டது, சிறுமியர் சிறுவீடுகட்டி விளையாடுதலை ஒக்கும். அவ்வுரையிலுள்ள தோஷங்களை ஆராய்தல் மணற்சோற்றிற் கல்லாராய்தல் போலும். ஆதலின், அதனை லக்ஷியத்தின்பாற் படுத்துக் கண்டித்தல் மகாபாணப் பிரயோகத்திற்கு முயலை லக்ஷியப் படுத்துதல்போல வடுச்சொற் கேதுவாம்..." "இங்ஙனம் பொருள்காணாது நமக்குத் தெரிந்தவாறு பற்றிப் பொருள்கொண்டு குற்றங்கூறிய நும்மறிவு, 'ஆனை எருத்தம் போலிய' என்புழிப் 'பொலிய' என்பதற்குப் பொருளறியாது, தமக்குத் தெரிந்த பொருளைப்பற்றிப் பாடம் பிழையெனத் தள்ளி, வேறு வேறு பாடங்கொண்டார் முறைமைத்தாகலின், அம்முறைமைபோல நகையாடி விடுக்கற்பாலதன்றி மறுக்கற்பாலதன்று." "உடல் பொருள் ஆவிகளை ஞானதீக்கையின் முதல்வனுக்கெனப் பூநீரோடும் தானஞ் செய்தளித்தலான், உடல் வினையை ஒழித்து ஒழிந்த புறப்பொருள் மாத்திரையே ஆண்டுத் தானஞ்செய்யப்படும் எனக் கொள்ளின், அஃதல்குலுறுப் பொழித்து மகட்கொடை

மறுப்புரை மாட்சி

கொடுப்போர் கூற்றாயும், பாலொழித்துக் கோதானம் செய்வோர் கூற்றாயும் முடியும்...'' என்பன போன்ற சுவைமிகு பகுதிகள் ஈண்டுக் குறிப்பிடற்பாலன. சுவாமிகளின் மொழிபெயர்ப் பாற்றலுக்குத் தருக்க சங்கிரகம், சித்தாந்தப் பிரகாசிகை, சிவதத்துவ விவேகம், சுலோக பஞ்சகம் முதலிய நூல்கள் சிறந்த சான்றுகளாகும்.

சுவாமிகள் வெறும் உரையாசிரியர், உரைநடையாசிரியர், மொழிபெயர்ப்பாசிரியர் மட்டுமேயன்றி மிகச் சிறந்த பெருங் கவிஞரும் ஆவர். கலைநலங் கனிந்து கவிதைச்சுவை பெருக் கெடுத் தொளிரும் காஞ்சிப் புராணம் ஒன்றே இவ்வுண்

காஞ்சிப் புராணம்

மையை வலியுறுத்தற் கமையும். காஞ்சிமா நகரில் உள்ள சைவ மடங்களில் உறையும் முனிவர்கள் திருவேகம்பநாதனை இடைவிடாமல் தியானித்துச் சிவானந்தம் நுகர்வதனை,

''காமனை முனிந்து நெடுஞ்சடை தரித்துக்
கவின்றகல் லாடைமேற் புனைந்து
யாமெலாம் வழுத்தும் துறவியென் றிருந்தும்
ஒருத்திதன் இளமுலைச் சுவடு
தோமுறக் கொண்டார் எனச்சிறை யிடல்போற்
சுடர்மனக் குகையுள் ஏகம்பத்(து)
ஓம்பொழிப் பொருளை அடக்கி ஆனந்தம்
உறுநர்வாழ் இடம்பல உளவால்''

என்றும்; திருத்தொண்டை நாட்டின் திணைமயக்கம் பற்றிப் பாடுங்கால், முல்லைக்கொடிப் புதர்களின் கீழே காடியானது புகுந்து உறங்க, அப்புதர் நடுவினுள்ள கொன்றைமரத்தினைச் சுற்றி மிளகுக் கொடி தாவிப் படர்ந்திருக்கும் தோற்றம், கயிலைமலையை இராவணன் எடுக்க முயன்றபோது அம்மை இறைவனைத் தழுவிநின்ற செயலைப் போல்வதாகும் என்றும்; கடற் காக்கையானது அடுத்துள்ள மலைச்சாரற் பலாச்சுளையைக் கவர்ந்துகொண்டு கப்பலின்கண் சென்று அமர, அது கண்ட மந்தி ஒன்று அருகிருந்த தோணியிற் பாய்ந்து கலக்கும் காட்சி, இராவணன் சீதையைக் கவர்ந்துகொண்டு

சென்று இலங்கையிற் சிறை வைத்தபோது, அனுமான் கடல் தாவிச் சென்று இலங்கையின் ஒரு பகுதியை எரியூட்டியது போலும் என்றும்; சுவாமிகள் கற்பனை நலம் சிறக்கப் பாடியிருக்கும் பகுதிகள் அறிஞர்க்கு ஆராப் பெருவிருந்தாகும்.

இனி, உரையாசிரியர் என்னும் நிலையில் நின்று சைவ சித்தாந்தச் செம்பொருள் நுட்பங்களை விளக்குவது மட்டுமன்றி, ஒரு பெருங் கவிஞராகவும் விளங்கி, அவை தம்மைத் தெளிவுற விளக்கும் பெருந்தகையாகச் சுவாமிகள் திகழ்

**கவிதை உவமைகளிற் சைவ சித்தாந்தம்**

தலைக் காஞ்சிப் புராணத்துள் நாமெலாம் கண்டு மகிழலாம். 'கவிஞர்களின் இயல்பான உள நிலைகள் அவர்தம் உவமைகளாற் புலனாகும்' என்று அறிஞர்கள் கூறும் கருத்தினைக் காஞ்சிப் புராணத்துள் சுவாமிகள் பெரிதும் கையாளும் சைவ சித்தாந்த உவமைகள் நன்கினிது மெய்ப்பிக்கின்றன. "மாயை காரிய உருக்களும் எம்பிரான் வடிவம் ஆயவேல் அவை அருள்மயம் ஆகும்" அதுபோல், தம் பிதற்றுரையும் ஏகம்பர்தம் பெருமை விரவுதலால் துகளறத் தோன்றும் எனவும்;

" போதம்மே லாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும்
வாதனை தாக்கு மாபோல் மழைப்பெயல் மாறித் தீர்ந்தும்
காதல்செய் துறையும் புள்ளும் மாக்களும் கவன்று நெஞ்சம்
நோதக மரங்கள் எல்லாம் நுண்துளி துவற்றும் மாதோ "

எனவும் ; பலவேறிடங்களில் தோன்றும் அருவிகள் எல்லாம் ஒருங்கே சென்று பாலாற்றினை அணையுந்தோற்றம், "சீரிய புவனந் தோறும் சிதறிய வினைகள் எல்லாம் ஓரிடத்து ஒருவன் றன்பால் உடங்குசேன் றுறுதல் போலாம்" எனவும்; பாலாறு ஒன்றே வயல்வளம் செழிப்பப் பல கால்களாகப் பிரிதல், " ஒருவனாகிய சிவபிரான் உலகுயிர் அளிப்பக் கருணை கூர்ந்து முன் நவந்தரு பேதமும் காட்டும் திரு நிகர்க்கும்" எனவும்; உழவர்கள் தண்ணீரைப் பல மடைகளிற் செல்லாதவாறு தடுத்து வயல்களிற் பாய்ச்சுதல், "பொறிகள் ஐந்தையும் புறஞ்சேலாது அடக்கி ஓர் நெறிக்கே குறிகொளும்படிச்

செலுத்து பேராளர்தம் கோள்போல்'' உளது எனவும் ; வயல் களிற் பாய்ச்சிய நீரினை அதன் கலங்கல் தெளிந்த பிறகு உழவர்கள் வடித்து விடுதல், "அருள் விளங்கலும் உடல் பொருள் ஆதிய தரும் அவன்புடை எய்துறக் கொடுத்திடும் தகைபோல்'' உளது எனவும் ; வைக்கோலினின்று நெல் நீங்கியதும் கடாக்கள் பிணையலை விட்டுச் செல்லுதல், "உடலின் ஆவி பிரிந் தென, ஊழ்வினைத் தொடர்பு நீங்குவதொக்கும்'' எனவும் ; நெல்லைக் காற்றில் தூற்றும்போது பதர்கள் அகறல், "பொய்யகன்றவர் ஐம்பொறி போதல் போலும்'' எனவும்பிறவாறும்; முனிவரர் சித்தாந்த உவமைகளை எளிமை மிக அடுக்கிப் பாடிக்கொண்டே செல்லுதல் எத்துணை இன்பம் விளைக்கின்றது!

இங்ஙனம் பல பாடல்களில் உவமை வாயிலாகச் சைவ சித்தாந்தக் கருத்துக்களை விளக்கும் சுவாமிகள், ஒரு பாடலிலேயே பல உவமைகளை நிரல்படக் கூறிச் சித்தாந்தக் கருத்துக்களைத் தெளிவித் தருளலையும் அவர் தம் நூல்களுட் காணலாம். ஆசிரியர் மெய்கண்டார் "நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும் ஓரின் அவை இன்றுமாறு ஒப்பு'' எனவும், அருணந்தி சிவனர் "இந்தனத்தின் எரி பாலின்நெய் பழத்தின் இரதம் எள்ளின்கண் எண்ணெயும்போல் எங்கும் உளன் இறைவன்'' எனவும், ஆங்காங்கு ஒரு பொருட் பெற்றியினை விளக்குவதற்கே பல்வேறு உவமைகள் கூறியிருத்தலை உணர்ந்து, அவற்றின் நுட்பங்களைத் தம் உரையின்கண் நமக்கு விளக்கி யருளியவர் அல்லரோ நம் சுவாமிகள்? ஆகலின், தாமும் அம்முறையினைத் தம் பாடல்களிற் கையாளுகின்றார்! 'அத்துவிதம்' பற்றிய ஆராய்ச்சி தத்துவநூல்களுளெல்லாம் சிறப்பிடம் பெறுவதாகும். சிறப்பாக அது சைவ சித்தாந்தத்துள் உயிர் நிலையாகத் திகழ்கின்றது எனலாம். இறைவன் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் இயைந்து நிற்றலையே 'அத்துவிதம்' என அறிஞர்கள் குறிப்பிடுவர். இம்முத்திற நிலைகளினும் இறைவன் உயிர்களுடன் இயைந்து நிற்றலை,

அத்துவித விளக்கம்

" பண்ணிசைவெம் பரிதிமதி திலதைலம்
 தீஇரும்பு பாணி உப்பு
விண்அநிலம் உடலுயிர்நீர் நிழல்உச்சிப்
 பளிங்குபகல் விளக்குப் பால்நீர்
கண்இரவி உணர்வொளிபோற் பிரிவரிய
 அத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெமையாண்ட துறைசைநமச்
 சிவாயகுரு சரணம் போற்றி "

என்னும் பாடலிற் சுவாமிகள் சுவைமிக விளக்கியருள்கின்றார்! இப்பாடலின்கண் பதின்மூன்று (13) உவமைகள் அமைந்துள்ளன. அவற்றுள் முதல் மூன்று ஒன்றாய் நிற்றலையும், அடுத்துள்ள மூன்று வேறாய் நிற்றலையும், எஞ்சிய ஏழு உடனாய் நிற்றலையும் விளக்குதற் பொருட்டுக் கூறப்பட்டன.

சிவமாகிய சித்துப்பொருள் அன்றாய்ச் சித்தின் பேதமாகிய சீவன், சிவனை இன்றித் தனித்து நிற்றலாற்றாது என்பார் 'பண் இசை' எனவும்; சிவனை இன்றிச் சீவன் தனித்து நிற்றல் இல்லையாயினும் அதனின் வேறு என்பார் 'வெம்பரிதி மதி' எனவும்; வேறாயினும் சீவனை விட்டுச் சிவனைப் பிரித்தறிதல் இயலாது என்பார் 'திலதைலம்' எனவும்; பிரித்தறிய முடியாவிடினும் சீவனின் வேறாகவே சிவன் தனித்து நின்று திகழ்வன் என்பார் 'தீஇரும்பு' எனவும்; சிவன் சீவனிற் கலந்துநின்றும் வேறாய் விளங்கும் தன்மை இது என்பார் 'பாணி உப்பு' எனவும்; சிவன் சீவனின் வேறாய் விளங்க வல்லவன் எனினும், சீவன் சிவனைப் பிரிந்து நிற்றல் ஒல்லாது என்பார் 'விண் அநிலம்' எனவும்; சிவன் சீவனோடு உடனாய் நின்று நுகர் பொருள்களிற் செலுத்தி இயக்கும்முறை இது என்பார் 'உடல் உயிர்' எனவும்; சீவனை இயக்குவிக்கும் சிவன் அதன்கண் என்றும் பிரிவற விரவி நிற்பன் என்பார் 'நீர் நிழல்' எனவும்; பெத்தமும் முத்தியும் ஆகிய இருதிற நிலைகளினும் சீவன், சிவனாற்பொருள்களை நுகரும்முறை இது என்பார் 'உச்சிப் பளிங்கு' எனவும்; முத்தி நிலையிற் சீவன் சிவ நிறைவில் அழுந்தித் தற்போதங் கெட்டுநிற்கும் என்பார்

'பகல் விளக்கு' எனவும்; தற்போதங் கெட்டு நிற்பினும் சீவனுக்குச் சிவானுபவ இன்பநுகர்ச்சியிற் சிறிதும் குறைவின்று என்பார் 'பால் நீர்' எனவும்; பாலும் நீரும்போலக் கலந்து சமமாய் நிற்பினும் சிவன் சிவனை இன்றி அமையாது அடிமையேயாம் என்பார் 'கண் இரவி' எனவும்; சிவன் அடிமையும் சிவன் ஆண்டானுமாய்த் திகழும் திறம் இனையது எனத் தெரிவிப்பார் 'உணர்வு ஒளி' எனவும்; சுவாமிகள் பல உவமைகளை ஒரு பாடற் கண்ணேயே நிரல்படத் தொடுத்துத் தொகுத்துக்கூறி விளக்கி யிருக்கும் சிறப்பு, கற்போர் அனைவர்க்கும் களிதுளும்பும் பெருமகிழ்ச்சி கனியச்செய்யும் திறத்ததாகும்!

"தெய்விகத் தத்துவக் கொள்கையானது எத்துணையளவு மனத்திற்கினிமை பயப்பதாக உள்ளது! அறிவிலிகள் நினைப்பதுபோல, அது கடினமானதும் சுவையற்றதும் அன்று. அப்போலோவின் குழலிசைபோல அஃது இனிமை மிக்க இசைநலம் உடையதாகத் திகழ்கின்றது. தேனிற் றோய்த்த இனிய பொருள்கள் போல எஞ்ஞான்றும் இனிமை பயக்கும் பெரு விருந்தாக அது விளங்குகின்றது. அதன்கண் சுவைக் குறைவோ தெவிட்டுதலோ சிறிதும் இலது" என்னும் பொருள்பட,

முடிவுரை

"How charming is divine philosophy!
Not harsh and crabbed, as dull fools suppose;
But musical as is Apollo's lute
And a perpetual feast of nectar'd sweets
Where no crude surfeit reigns"

என ஜான் மில்டன் என்னும் ஆங்கிலக் கவிஞர் பாடுதற்கேற்பச் சுவாமிகள் விளக்கும் சைவ சித்தாந்தக் கருத்துக்களும் சுவைமிக்குச் சிறந்து திகழ்கின்றன என்பது உண்மை. வெறும் புகழ்ச்சியில்லை! சுவாமிகளின் நூல்களை நாம் அனைவரும் கற்றுணர்ந்து நலமெய்தத் திருவேகம்பப் பெருமானின் திருவருள் துணை செய்வதாக!

———

# வாழ்வாவது எது?

(ந. ரா. ஆடலரசு)

உயிர்கள் வாழ விரும்புகின்றன. "உய்தல்" என்னுந் தமிழ்ச் சொல்லின் அடிப்படையில் துன்பங்களிலிருந்து பிழைத்து வாழ விரும்பும் அறிவுப் பொருளுக்கு "உயிர்" என்று பெயர் வைத்திருக்கின்றனர் நந் தமிழ் முன்னோர். 'கண் என்ப வாழும் உயிர்க்கு' என்றதும் காண்க!

'அறிவு' இருப்பதனால்தான் உயிர்கள் துன்பங்களை நீக்கிக் கொண்டு, அழியாமல் வாழ முற்படுகின்றன. அவ்வாறு முற்பட்டு முயலும் உயிர்கள் தத்தம் அறிவு நிலைக் கேற்றபடி அமையும் ஆற்றலால் துன்பங்களை நீக்கிக் கொண்டு வாழ்கின்றன.

ஓரறிவுயிர்களாகிய புல், பூண்டு, மரம், செடி, கொடி முதல் ஆறறிவுள்ள மனிதன் வரையில் உள்ள எல்லா உயிர் களின் நிலைகளிலும் இந் நியதியைக் காணலாம். ஆனாலும் பகுத்தறிவுடன் திகழும் மனிதன் முன்பின் நிலைகளை ஆராய்ந்து தன்னைக் காத்துக் கொள்வதில் மற்ற உயிர்களை விட மேம்பட்டு நிற்கின்றான். எவ்வளவுக் கெவ்வளவு மனிதன் பகுத்தறிவில் உயர்ந்து நிற்கின்றானோ அவ்வளவுக் கவ்வளவு அவன் துன்பமில்லாத நல்வாழ்க்கையை முயன் றடைய வாய்ப்பிருக்கிறது. ஆகவேதான், வாழ்வின் நுட்பங் களை யுணர்ந்து மறையருளிய திருவள்ளுவர்,

"அறிவு அற்றங் காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண்"

என்று அறிவு பற்றிக் கூறி ஊக்கப்படுத்துகிறார்.

"வாழவேண்டுமானால்—வாழ்வில் எதிர்ப்படும் இன்னல் களை நீக்கிக்கொண்டு முன்னேற வேண்டுமானால், 'அறிவை' வளர்த்துக்கொள்!" என்று திருவள்ளுவர் அறிவுரை கூறு கிறார்.

அறிவை வளர்த்துக்கொண்டால் போதுமா? வாழ்ந்து விட முடியுமா? என்றால், போதாது; மேலும் ஒன்றை

நாடுதல் வேண்டும். பொருட்பாலில் 'அறிவுடைமை' என்ற அதிகாரத்தை வைத்த தமிழ்மறை யுடையார், அறத்துப்பாலில் "மெய்யுணர்வு" என்றோர் அதிகாரத்தை வகுத்திருக்கின்றார். இரண்டையும் புடைபட வைத்துப் பன்முறையும் படித்துப் படித்துச் சிந்தித்தல் வேண்டும்.

அறிவான் மிக்கவரெல்லாம் உலகத்திற் பல வகையினும் இடர்ப்படுவதையுந் தவறிழைப்பதையுங் காண்கின்றோம். வரக் கூடிய இடர்களை முன்கூட்டி யறிந்து தடுத்துக் கொள்ளவும் வந்த இடர்களை நீக்கிக்கொள்ளவும் 'அறிவு' பயன்படு மென்பது உண்மையே. ஆனாலும், அது புரைபட்டுப் போகிற நிலைகளும் உண்டு. ஆகவே, இடர்களே எய்தாத, இடர்களை 'இடர்கள்' என்றுகூடக் கருதலிலாத உயர்நிலையை யடைதல், இந்த அறிவு நிலையைவிட உயர்ந்ததல்லவா? அது தான் மெய்யுணர்வு நிலை. அதை யடைந்தார்க்கு இன்னல் என்பதே நேராது. நேரும் இன்னல்களும் இல்லையாம்.

இந்தப் பகுத்தறிவு ஓரளவில், பொருளியல் நலங்களை யடையப் பயன்படலாம். ஆனால் மனநிறைவை—எது வரினும் தளராத உறுதியை—அமைதிமிக்க நல்லியல்பை—அமர நிலையை அடைய மெய்யுணர்வே வேண்டும். அதைப் பெறுகிற நிலையே முழுநிறை வாழ்வாகும்.

இனி, 'அறிவு' முயன்று பெறக் கூடியது; 'மெய்யுணர்வு' முயன்று பெறக் கூடியதன்று. அறிவு கிணறு தோண்டி நீர் எடுப்பதைப் போல்வது; மெய்யுணர்வு வானத்து மழை நீரை ஒப்பது.

அப்படியானால், அதைப் பற்றித் தெரிந்து என்ன பயன்? என்று கேட்கத் தோன்றும். இங்குதான் நாம் மேற் கொள்ள வேண்டிய போக்கு ஒன்று இருக்கிறது. அதாவது நமக்கு வாய்த்துள்ள அறிவைப் பலமுகத்தாலும் வளர்த்துக் கொள்வதோடு, அது 'சென்ற விடத்திற் செலவிடாது, தீதொரீஇ நன்றின்பால் அதனை உய்த்தல்' வேண்டும்.

அதாவது, நமக்குள்ள அறிவு கூரிய கத்தி போல்வது. நல்லவற்றிற்கும் பயன்படும்; தீயவற்றிற்கும் பயன்படும். தீயவற்றைத் திறம்படச் செய்யவே விரைந்து முற்படும்.

இஃது இந்த அறிவுக்குள்ள இயல்பு. இதனை அவரவரும் தத்தம் வாழ்வின் நிகழ்ச்சிகளை ஊன்றிப் பார்த்து அறியலாம்.

தீய செயல்களை ஆசையோடு செய்யும்போது கற்றவர் கல்லாதவர் எல்லோருக்கும் உள்ளிருந்து ஓர் உணர்வு "இது தவறு" என்று உணர்த்துகிறது. "நான் ஏதும் அறியாமே என்னுள் வந்து நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்" என்பர் நாவுக்கரசர்! ஆனால் அவரவர் இயல்புக்கேற்பவும், பழக்க வழக்கச் சூழல்களுக் கேற்பவும் அவ்வுணர்வை மதியாது அவாவியதைச் செய்து, விரும்பிய இன்பத்தையும் அதன் நிழலிலேயே துன்பத்தையும் அடைகின்றனர்.

"மனச்சான்று" எனப்படும் அவ்வுணர்வை மதித்து நடப்பவர்கள், அவாவழிச் செல்லும் அறிவைத் தடுத்து நிறுத்தி நன்றின்பாற் படுத்துவார்கள். பிறகு அவர்கள் அடையும் மனநிறைவையும், எய்தும் துன்ப நிழலற்ற இன்பப் பெருக்கையும் அவ்வாறு நடந்தாரே உய்த்துணரக்கூடும்.

துன்பத்துக்கு அடிகோலும் அழியும் இன்பத்திலிருந்து பிழைத்து துன்ப நிழலே இல்லாத, நிலைத்த இன்பத்தை அடைய "மனச்சான்று" என்னும் உணர்வுவழி அறிவைச் செலுத்தி வந்தால் வான்மழை யெனத்தக்க 'மெய்யுணர்வு' தக்க பக்குவம் வந்ததும் நம்மிடம் மலர்ந்து மணம் பரப்பத் தொடங்கிவிடும். அந்நிலையே "வாழ்வு" எனப்படும்.

இவ்வாறு மனச்சான்று வழி பகுத்தறிவைச் செலுத்தி வாழும் வாழ்வே அறவாழ்வு எனப்படும். அவ்வாழ்வின் முடிவிலேயே "மெய்யுணர்வு" பூக்கும். அதனாலேயே அறத்துப்பாலின் இறுதிப் பகுதியில் "மெய்யுணர்வு" அதிகாரம் இருக்கிறது. அது கொண்டே அவாவை முற்றாக அறுக்க முடியும். வெறும் அறிவு கொண்டு 'அவா அறுத்தல்' ஏலாது. அதனாலேயே செந்நாப் புலவர் 'மெய்யுணர்வு' என்னும் அதிகாரத்தை அடுத்து அவா அறுத்தல் என்னும் அதிகாரத்தை வைத்துள்ளார்.

அவா அற்ற வாழ்வே துன்பமற்ற நல்வாழ்வாகும். தெய்வப்புலவர் வையத்துள் வாழ்வாங்கு வாழ்தல் என்று குறிப்பிடும் வாழ்வில்தான், அக்குறிப்பைத் தொடர்ந்து அவர்

விரித்துக்கூறும் அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந்நன்றியறிதல், ஒழுக்கமுடைமை, அடக்க முடைமை முதலிய பண்புகள்—உணர்வால் (அறிவால் முடியாது) மட்டுமே மேற்கொள்ளக்கூடிய பண்புகள், மிளிரும். அப்பண்புகள் மிளிரும் வாழ்வே வாழ்வாகும்.

இந்த மெய்வாழ்வை நாடிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் போன்ற பெரியோர்கள் வெறும் பகுத்தறிவால் 'வாழ்வு' என்று போலியாக மேற்கொள்ளப்படும் புல்லிய வாழ்வையே, 'வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்' என்று தெரிவித்து மெய்வாழ்வுக்கு வழிகாட்டிச் சென்றனர். அந்த மெய்யுணர்வு வாழ்வே—அந்நாட்டத்தோடேனும் நடக்கும் வாழ்வே, சான்றோரால் மதிக்கப்படும் என்க. தொண்டலால் துணையில்லாத அந்த வாழ்வு மன்பதைப் பணி நாட்டத் தோடேயே நடக்கும்.

அவ் வாழ்வை மறுப்பவர்களும், போற்றாதவர்களும் உண்டோ ? அண்ணல் காந்தி, அரும்பெறல் ஏசு, அருமைப் புத்தர், அருள்மிகும் அப்பர் போன்றார் வாழ்வு அத்தகைய வாழ்வாகும். அகிலம் போற்றும் அவர்கள் வாழ்வன்றோ வாழ்வாகும்.

---

# சதுரர் யார்?

(திருநாவுக்கரசு தேசிகர்)

சதுரர் என்ற சொல்லுக்குத் திறமையாளர் என்று பொருள். திறமையுள்ளவர், சாமர்த்தியமுள்ளவர், சமர்த்தர் என்றெல்லாம் விளக்கலாம். இன்னும் சதுரத்தன்மை யுள்ளவர் சதுரராவர். சதுரம் என்பது நான்கு சம பக்கங் களைக் கொண்டது. நான்கு பக்கங்களையும் நோக்கிச் சரி யானபடி செயல்புரிவது. அதாவது பல பக்கங்களிலிருந்து வரும் எச்சரிக்கைகளைக் கொண்டு அதற்கொப்பச் செயல் புரி வது சதுரத் தன்மையாகும். 'சதுரங்கட்டிப் பேசுதல்' எனும் ஒரு சொற்றொடர் வழக்கத்தில் இருந்துவருகிறது. அதாவது எல்லா எதிர்ப்புகளையும் முன்கூட்டியறிந்து அவை களுக்கெல்லாம் தக்கபடி, முரண்படாமல் பேசுந் திறமை

யாகும். எனவே சாமர்த்தியமாயிற்று. அத்தகையினரே சமர்த்த ரெனப்படுவர். இச்சொல் மருவிச் சமத்து என வழக்காற்றில் இருந்துவருகிறது. இன்னும் சாதாரணமாகக் கெட்டிக்காரர் என்றும் சொல்லுவதுண்டு. கெட்டி என்பது உட்புறம் உறுதியாய் உள்ளது. துவாரம் அற்றது. உள்ளே ஒன்றுமில்லாமல் ஓட்டையாய் இராது. உ-ம். கெட்டிவளை கட்டிவளை. அறிவுடையவன், எல்லாந் தெரிந்தவன் கெட்டிக்காரன் எனப் பேசப்படுகிறான். தெரியாதவன் மூடன் எனப்படுகிறானல்லவா? எனவே சதுரர் என்றால் அறிவுடையவர், வல்லவர் என்று பொருள் சொல்லலாம். இன்னும் சதுரன், சத்துடையவன், எச்செயலினும் பயன் காண்பவன், பயனில் செய்கையற்றவன். அவன் செயல் வீணாகாது. பயனை நோக்கிய செயலாகவே இருக்கும். அதுவே அறிவுடையோரின் செயலாகும். அறிவில்லாதவர் செயல், பேச்சு எல்லாம் பயனுடையதாக விராது.

பயன் காண்பதில் இருவகை: தனக்குப் பயனளிப்பது பிறர்க்குப் பயன்படுவது என இருவகை. பயனில் பேச்சு பாழாய் முடியும் என்பது வசனம். பாழ்=சூனியம் என்றவாறு. இத்தகைய சதுரத்தன்மை மக்களுக்கு வாழ்க்கையில் எவ்வளவுக்கும் வேண்டியதே. எனவே மிக மிக அவசியமாயிற்று. எல்லாத் துறைகளுக்கும் இது அவசியமே எனினும் சிறப்பாய் வாணிபத் துறைக்கு மிக அவசியமென்னலாம். சதுரனுயிராவிடில் வாணிபத்தில் பயன் காணமுடியாது. நஷ்டமே ஏற்படும். வாணிபம், வியாபாரம் என்பது ஒன்றே. அதாவது ஒரு பொருளைக் கொடுத்து மற்றொரு பொருளைப் பெறுவது வாணிபமாகும். தன்னிடமுள்ள பொருளைக் கொடுத்துத் தனக்கு வேண்டிய தன்னிடமில்லாத வேறு பொருளைப் பெறுவதாகும். பொருளைக்கொடுத்து மற்றொரு பொருளைப் பெறுவதைப் பண்டமாற்று என்பார்கள். அப்படி மாற்றுவதில் ஒரு பொருள் மற்றொன்றிற்கு உயர்ந்ததாகவும் சமத்துவமானதாகவும் இருக்கக்கூடும். மாற்றுப் பொருள் உயர்ந்ததாகவே இருக்க விரும்புவார்கள். அதுவே சிறந்ததாகும். சமத்துவப் பொருளைப் பெறுவதும் இழுக்

கல்ல. குறைவான, தாழ்ந்த பொருளைப் பெறுவது இழுக்காகும். அதினும், பெறுகின்ற பொருளின் உயர்வும் தாழ்வும் பெறுவோர்களின் விருப்பத்தையும் தேவையையும் பொறுத்திருக்கும். பெறுகின்ற பொருள் உயர்ந்ததேயெனினும் பெறுபவரிற் சிலர் அதை அங்ஙனம் கருதமாட்டார்கள். பெறுகின்ற பொருள் தாழ்வானதாயினும் பெறுபவருக்கு வேண்டியதாயின் அது உயர்ந்ததாகவே மதிக்கப்படும். எனவே இவையனைத்தும் சீர் தூக்கிப் பார்க்குமிடத்துப் பண்டம் மாற்றுவதில் திறமையும் அறிவும் வேண்டுமென்பது பெறப்படுகிறதல்லவா? இதுதான் சதுரத்தன்மை எனப்படுவது. இதைக் கையாள்பவரே சதுரராவர்.

மணிவாசகப் பெருமான் ஒருகால் பண்டம் மாற்று என்னும் ஒரு சிறிய வாணிபம் செய்ததைக் குறிப்பிடுகிறேன். அதை ஆராய்வாம். இவர் மாற்றும் பண்டம் சடப்பொருளல்ல. உயிர்ப்பொருள். ஒரு உயிரைக் கொடுத்து மற்றொரு உயிரை—பேருயிரைப் பெறுகின்றார். கொடுத்தது தன்னுயிர், பெற்றது பேருயிர்—தன் ஆத்துமாவைக் கொடுத்துப் பரமாத்துமாவைப் பெறுகிறார். அப்படிக் கொடுத்து வாங்கியதில் ஒரு சிறப்பு மிளிர நயம்படப் பேசுகிறார். உயரிய பொருளைத் தனக்குக் கொடுத்துத் தாழ்ந்தபொருளைக் கொடுத்தவர் பெறுவதுபோலப் பேசுகிறார்.

> *" தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னைச்*
> *சங்கரா யார்கொலோ சதுரர் ?"*

கொடுத்துப் பெறுபவர் இவராயிருக்க, கொடுத்துப் பெறுபவர் அவரென்று மாறுபட்ட முறையில் பேசுகிறார். இதன் கருத்தை உன்னுவோம்:—

தன்னுயிர் தாழ்ந்தது, இறைவன் பேருயிர். தாழ்ந்த பொருளைத் தான் கொடுத்து உயர்ந்தபொருளைப் பெறுதற்கு உயர்ந்த பொருளை உடையவரான இறைவன் ஏமாந்தவராக இருக்கவேண்டும். உண்மையில் இறைவன் அப்படிப்பட்ட ஏமாந்தவரல்லர் என்பதை உணர்த்தவும், அப்படிப் பெற்றதாகச் சொன்னால் இறைவனுக்கு இழுக்கு நேரிடுமென்று

எண்ணியும் மாற்றிச் சொன்னார்போலும்! உயர்ந்தபொருளைக் கொடுத்துத் தாழ்ந்த பொருளை அவரே பெற்றுக்கொண்டா ரென்றால் பழி அவர்மேல் போய்விடுகிறது. அப்பழிக்குத் தான் ஆளாக வேண்டாமென்று கருதினார் போலும். மேலும், உயர்ந்தபொருளை யுடையவன் அறிவாளியாக இருப் பான். அறிவாளி தவறானமுறையில் செயல்புரியமாட்டான். அவனை ஏமாற்றி அப்பொருளை அவனிடமிருந்து பெற்றுவிட முடியாது. அவனே அதை மனமுவந்து விரும்பிக்கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுக்கும்போது யாருக்குக் கொடுக் கிறோமென்பது அவனுக்குத் தெரியும். அதைத் தெரிந்த பின்னரே கொடுக்க முற்படுகிறான். அதைப்பெற நாம் நம் மைப் பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டும். பக்குவமடைந் தால் அவனே அதைக் கொடுத்து நம் பொருளைப் பெற்றுக் கொள்ளுவான் என்பது விளங்கத் தன்னைக்கொடுத்து என்னை வாங்கிக்கொண்டான் என்று மாறுபடுத்தித் "தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னை" என்று பேசினார் என்று பொருள்செய்வதும் பொருத்தமேயென்க.

இதில் இன்னொரு சிறப்பும் காண்போம்:—இவ்வாணிபச் செயலில் யார் சதுரர் எனுங் கேள்விக்கு உயர்ந்த பொருளைப் பெற்றவர்தான் சதுரர் என்று எடுத்த எடுப்பில் சொல்லத் தோன்றுமல்லவா? ஆனால் மணிவாசகனார் மாற்றிச்சொன் னதை உணர்ந்தால் இங்கு உயர்ந்த பொருளைக் கொடுத்தவர் தான் சதுரர் என்பது புலப்படாமல் போகாது. அக்கருத் தினையே தான் மணிவாசகப் பெருமானும் வற்புறுத்துகின் றார். எப்படியெனில், "தந்தது என்தன்னை கொண்டது உன் தன்னை" என்று சொல்லி யிருப்பாரேயாகில் தன்னைச் சதுரர் என்று சொல்ல வந்தவராக எண்ண இடமேற்படும். அவ்விதம் சொல்லாமல் "தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னை" என்று தந்ததும் கொண்டதும், இரண்டும் அவர் செய்கைபோலல்லவா பேசுகிறார். ஆதலால் அவர் கொடுத்தே தான் பெறவேண்டியவராயிருக்கத் தான் சதுராராய் இருக்க இடமேது? கொடுத்த நீதான் சதுரர் என்பது விளக்கமாய்ப் பெறப்படுகிறதல்லா?

இன்னும் இச்செயலைப் பண்டம் மாற்று என்று பேசினோமல்லவா? கொடுத்து வாங்குவது பண்டம் மாற்று என்று கண்டோம். இத்தகைய செயல் மக்களுக்குள்ளே நிகழும். இறைவனையும் தம்மையும் தொடர்பு படுத்திப் பேசும்போது இறைவன் இம்முறையினைக் கைக்கொள்ளமாட்டார். கொடுப்பது ஒன்றுதான் செய்வார். பதிலுக்கு ஒன்றும் பெறமாட்டார். கொடுக்கத்தான் தெரியும். வள்ளலல்லவா? இக்கருத்தினை அடிகளார் நமக்கு எப்படி புலப்படுத்துகிறாரெனில் இரண்டுவகையில் காட்டுகிறார். "தந்தது" "கொண்டது" என்னும் சொற்களால் அறியலாம். இரண்டும் அவர் செயல்களாகவே காட்டப்படுகிறது. அன்றேல், தந்தது கொடுத்தது என்று பேசி இருப்பார். தன்னுடைய செயலே பேசப்படவில்லை. அவர் தந்ததும் அவர் கொண்டதும் தானே பேசப்படுகிறது. இவர் கொடுத்தது ஒன்றுமில்லை என்று விளங்குகிறது. மற்றொன்று, கடைசியாய், "யான் இதற்கிலன் ஓர் கைம்மாறே" என்பதை உன்னுங்கால், என்னிடமிருந்து நீ ஒன்றும் பெறவில்லை என்பது பெறப்படவில்லையா? என்னிலையிலிருந்து பேசும்போது பதிலுக்கு ஏதாவது கொடுக்க வேணுமென்று எண்ணுகிறேன். அதுவும் கைம்மாறாகக் கொடுக்கவேண்டியது முறைமையும் கடமையும் அல்லவா? எனவே கொடுக்க எண்ணுகிறேன். ஆனால் என்ன கொடுப்பது? தகுதிவாய்ந்தது ஒன்றுமில்லையே என்று வருந்துகிறேன். நோக்குமிடத்து, "கரணம் எல்லாம் நீ, தேறும் வகைநீ, திகைப்புநீ, தீமை நன்மை முழுதும் நீ, வேறோர் பரிசிங் கொன்றில்லை" என்று காட்டுகிறார். என்னிடம் கொடுக்க ஒன்றுமில்லை என்றவாறு.

இன்னும், கைம்மாறு கருதாது வழங்கும் வள்ளலுக்கு நான் கொடுக்க வேண்டுமென்று எண்ணுவதும் தவறே. நான் கொடுக்க வேண்டுமென்று எண்ணுவதும், அப்படி கொடுத்தற்கு ஒன்றுமில்லையே என்று வருந்துவதுமே கைம்மாறாகு மென்க.

கைம்மாறு என்பது ஒருவன் கொடுக்கப் பெற்றுக் கொண்டு பின்னர் அதற்குப் பதிலாகக் கொடுப்பதாகும்.

இங்கு அடிகளார் வாக்கை உற்று நோக்கில் நீ எனக்கு உன்னையே கொடுத்தாய் என்பது, என்னை ஆட்கொண்டுவிட்டாய்; என்னை அங்ஙனம் ஆட்கொண்டபோதே என் ஆவியையும் உடலையும் உடைமையையும் எல்லாம் பெற்றுக்கொண்டாய். நான் கொடுத்தல்ல, நீயே பெற்றுக்கொண்டாய். பிறகு என்னிடம் என்ன இருக்கிறது கைம்மாறாகக் கொடுப்பதற்கு ? என்பது கருத்து. எனவே யான் இதற்கிலன் ஓர் கைம்மாறே என்றார். நீ கொடுப்பதற்கு முன் எல்லாம் என்னிடம் இருந்தன. இப்போது அவையெல்லாம் நீ பெற்றுக் கொண்டாய். கொடுப்பதற்கு என்னிடம் ஒன்றுமில்லை. அப்படி ஒன்றும் கொடுக்க முடியாமைக்கு என் செய்வேன் ? கொடுக்க முடியாதபடி நீ செய்துவிட்டாய். நன்றே செய்வாய், பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகம்? உன்னை எனக்குக் கொடுத்தாய் நன்றேசெய்வாய். அதற்குப்பதில் உனக்கு ஒன்றும் கொடுக்க முடியாதபடி செய்துவிட்டாய். பிழை செய்வாய். என்னிடமிருந்து எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டாய். இதற்கு நானோ நாயகம். கைம்மாறு செய்ய முடியாமற்போன பிழை என் பிழையாகாது என்றவாறு.

கைம்மாறு செய்ய வேணுமென்று எண்ணினேன். அவ்விதம் செய்ய முடியாமல் செய்துவிட்டாய். செய்யவேணுமென்று எண்ணலாம். எண்ணுவது என்செயல். அதைச்செய்வது என்வசமில்லை. திகைக்கின்றேன். திகைத்தால் தேற்ற வேண்டாவோ ?

தந்தது உன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்த மொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யான்இதற் கிலன்ஓர் கைம்மாறே.

——

# ஒரு பழம் பாடலின் உருவம்

[முதுபெரும் புலவர். முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்]

‘ தன்ஞ தலஞ வலஞத லெழின்மத ஞதல் சிங்கா
தன்ஞ தலஞதல் புரந்தா ஞதலுஞ் சற்று மெண்ணேன்
தன்ஞ தஞவெனு வண்டிசை யார்தமிழ்க் கூடலில் வாழ்ந்
தன்ஞ தஞலுன் பதம்புகழ்ந் தேனெனிற் சங்கரனே.’

மதுரை யமக அந்தாதியின் 47-ஆம் பாடலாக வரும் இக்கட்டளைக்கலித்துறையிலே நாலடியிலும் முதற்சீரெல்லாம் தேமாச் சீராகத் தோன்றியிருத்தல், அசையளவு அசைந்த யாப்பறிஞர்க்கும் விளங்கும். முற்பாட்டின் ஈற்றில் ‘ இழந்த னனே ’ என்று முடிந்தது. இப் பாட்டின் முதல் நிரையசை யிலே தொடங்கப்பட்டது. ஒவ்வோரடியிலும் முதல் ஐந் தெழுத்தும் ஒன்றிவரத் தொடுத்த யமகத் தொடையும் இதில் விளங்கா தொழிந்தது. முதற்சீர் எல்லாம் தேமாச் சீரல்ல. பல இடத்தில், தளைக்கேடு தலைக்கேடு. சிங்காதன் என்றல், அமையாது. நாகபுரந்தரன் என்றலும் பிழைபட்டது. அன்றி யும், மூன்றுவதும் நாலாவதும் ஆகிய அடிகளின் இணைப்பில் நின்ற ‘ வாழ்ந்தனன் ’ என்ற சொல்லும் என் கருத்தை மெய் யெனச் சொல்லும். அதுவே, இப்பாடலின் ஒவ்வோரடி யிலும் உள்ள இரண்டாவதெழுத்துக்கள் ‘ னகர வுயிர்மெய் ’ களே என்று நிலைகாட்டும். அதன்மேல், இவ்வுருவிற் கேற்பப் பொருள் கூறல் எவர்க்கும் அரிது ஆகும். ஆதலின், பொருள் புலப்படும் வகை உண்மை யுருவத்தை வெளியிடுதல் அறிந் தோர் கடன் ஆயிற்று. என் கடனும் அப் பணிசெய்து கிடப் பதே. இப் பணியை அப் பணி புராதனன் நற்பணியாகக் கொள்வான் என்று கருதுகின்றேன்.

அப் பாடல் இருந்தவாறு :—

தனஞத ஞவல ஞத லெழின்மத ஞதல் சிங்கா
தனஞத ஞக புரந்தா ஞகலுஞ் சற்று மெண்ணேன்
தனஞத ஞவெனும் வண்டிசை யார்தமிழ்க் கூடலில் வாழ்ந்
தனஞத ஞலுன் பதம்புகழ்ந் தேனெனிற் சங்கரனே.

முதலீரடியின் பொருள் :—தனன் ஆதல் - நாவலன் ஆதல் - எழில் மதன் ஆதல், சிங்காதனன் ஆதல், நாகபுரந்தரன் ஆதலும் சற்றும் எண்ணேன் - பொருட் செல்வனாதலையும் கல்விச் செல்வனாதலையும், அழகில் மன்மதன் ஆதலையும், மண்ணுளும் மன்னவனாதலையும் விண்ணுளும் வேந்தனாதலையும் சிறிதும் மதியேன்.

தனன் - செல்வன், தனம் - தனன், சிரம் உடையவனைச் சிரன் என்பதுண்டு. 'திரிசிரன்' (முத்தலையன்) என்றலும் நோக்குக. 'சிங்காதனம்' 'சிங்காதனன்' என்பதற்கும் இதற்கும் வேறுபாடில்லை. தனன் - பொருட் செல்வன். நாவலன் - (நாவன்மை, பாவன்மை, புலமை முதலியவற்றிற்கும் ஏதுவான) கல்விச் செல்வம். எழில்-அழகு, அழகில் என்றும்-அழகுடைய என்றும் கொள்ளலாம். நாகம் - விண்ணுலகு. புரந்தரன் - இந்திரன்; 'வேந்தன்.'

பன்னீரடியின் பொருள் :—

'தனனாதனா' என்னும் அநுகரணம் வண்டுகள் இசைக்கும் ஒலியைக் குறித்து நின்றது. இசை - ஆர்ந்த கூடல், தமிழ்க் கூடல். கூடலில் வாழ்ந்தனன். நா தன்னால்-நாக்கால். தன் - சாரியை. நா தன்னால் புகழ்ந்தேன். உன்பதம் நாவால் புகழ்ந்தேன். சங்கரனே, கூடலில் வாழ்ந்தனன். உன்பதம் புகழ்ந்தேன் எனில், சற்றும் எண்ணேன் தனன் ஆதல் முதலியவற்றை என்று இயைபுற உரைக்க. இத் துணை நல்ல பாடல் அத்தகைய உருவ வேறுபாடு அடைந்து, இயற்றிய பாவலர் முயற்றிறம் விளங்காவாறு செய்துள்ளது. இதுவும் திருவருட் செயலே. 'இருந் தமிழே உன்னால் இருந்தேன் விண்ணோர் விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்.'

---

# திருநாவுக்கரசர்

[மா. ப. தியாகராசன், பி.ஏ.]

'திரு நின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரசர்' சித்திரை மாதம் சதய நக்ஷத்திரம் கூடிய நன்னாளில் சிவபெருமான் சேவடி அடைந்தனர். அந்த நன்

ளுள் இவ்வாண்டு சித்திரை மாதம் 19-ந்தேதி (2-5-1959) சனிக்கிழமை அமைகிறது. அன்று, அவருடைய தேவாரங்களை ஓதுதல் அவர்களுக்கு விழாச் சிறப்புகள் செய்தல், சிவாலய வழிபாடு சிவனடியார்களுக்கு ஆராதனை புரிதல் முதலிய செய்கைகளால் அவர்களுடைய புகழைப் பரவச் செய்தல் வேண்டும். "திருநாவுக்கரசு" என்னும் இவருடைய சிறப்புப் பெயர் சிவபெருமானால் அருளப் பெற்ற திருநாமம். திருவதிகை வீரட்டானத்தில் இவர்கள் சிவபெருமானைத் திருப்பதிகங்களோதித் துதி செய்தபோது "நாவுக்கரசென்றுல கேழினும்நின் நன்னாமம் நயப்புற மன்னுக" என்று பரமசிவத்தால் திருவாய்மலர்ந்தருளப் பெற்றார். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளால் இவர்களுக்கு அருளப்பெற்ற திருநாமம் " அப்பர் " என்பது. தாண்டகங்கள் மிகுதியாக இவர்கள் பாடியிருத்தலால் சேக்கிழார் பெருமான் "தாண்டக வேந்து, தாண்டகச் சதுரர்" என்று இவர்களைப் போற்றியுள்ளார்கள். சொல்லரசு, வாக்கின் மன்னர், வாகீசர் என்றெல்லாம் இவர்களைக் குறிப்பிடுவதுமுண்டு.

இவர் திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் குறுக்கையர் குடியில் அவதரித்து எண்பத்தோராண்டு பருவுடல் தாங்கி அருள் நெறியில் வாழ்ந்தும், அந்நெறியை ஆங்காங்கு விளக்கியும், கிரியை யென்று சொல்லப்பட்ட தாசமார்க்கத்தைக் காட்டியருளிச் சித்திரை மாதம் சதய நக்ஷத்திரத்தில் சிவபதமடைந்தனர். இவருடைய தந்தை புகழனாரென்பவர். தாயார் மாதினியாரென்பவர். இவருடைய தமக்கை திலகவதியாராவர்.

திருநாவுக்கரசர், சைவநெறி நின்று சைவ சமயத்தை "மலையே வந்து வீழினும் மனிதர்காள்! நிலையினின்றும் கலங்கப் பெறுகிரேல்" என்று முழக்கம் செய்து நிலை நிறுத்திய புகழுக்குக் காரணமாயிருந்தவர், இவருடைய தமக்கை திலகவதியாராவர். சேக்கிழார் பெருமான்,

" தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்

பாய்வதுபோல் அன்புநீர் பொழிகண்ணும் பதிகச் செஞ்சொல்
மேய செவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே.''

" இந்தக் கருணை கண்டால், மிண்டாய செய்கை அமண் கையர் தீங்கு விளைக்கச் செற்றம் உண்டாயின வண்ணம் எவ்வண்ணம்'' எனத் திருநாவுக்கரசரது திருவுருவக் கருணையைப் படம் பிடித்துக் காட்டுவது போல் பாடியுள்ளார்.

" மைப்படிந்த கண்ணாளுந் தானும் கச்சி
மயானத்தான் வார்சடையன் என்னினல்லால்
ஒப்புடையனல்லன் ஒருவனல்லன்
ஒரூரனல்லன் ஒருவமனில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே ''

" விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல் நட்டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே ''

என வரும் பாடல்களால், கடவுளின் இலக்கணத்தினை அப்பர் சுவாமிகள் சிறந்த முறையில் விளக்கியுள்ளார். சிவ புண்ணியத்தைச் செய்யவேண்டுவன யாவை என்பது திருமூலர் பின் வரும் விளக்கியுள்ளார்கள்.

" புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்செயா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை யீசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே.''

இப்பாடலின் கருத்தையே திருநாவுக்கரசர் தமது தேவாரங்களில் ஆங்காங்கு விளக்கியுள்ளார்கள்.

" பெரும்புலர் காலைமூழ்கிப் பித்தற்குப் பத்தராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை யுள்ளே வைத்து
விரும்பி நல்விளக்குத் தூபம் விதியினால் இடவல்லார்க்குக்
கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர் வீரட்டனாரே''

என நான்காம் திருமுறையில் பாடியிருத்தலின் சிவபெருமானைக் காலையில் பூக்கொண்டு தொழுதல் வேண்டுமென்பது பெறும். அப்படி பூசனை புரிவது மனம் நிலை பெறுவதற்குகந்த உபாயமெனவும் பின்வரும் திருத்தாண்டகத்தால் உணர்த்துகிறார்கள்.

" நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றியென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடை யெம்ஆதி யென்றும்
ஆரூரா வென்றென்றே அலறாநில்லே."

எனவே, விடிவதன் முன் எழுந்திருந்து பூவொடு நீர்கொண்டு பூசனைகள் முடிக்க வேண்டுமென்பது ஒரு சிறந்த உபதேசமாகும். சித்திரைச் சதயமுதற் கொண்டாகிலும் விடியுமுன் எழுந்திருத்தலாகிய பழக்கத்தை வாழ்க்கையில் அமைத்துக் கொள்ள வேண்டுமெனும் உறுதி கொள்ளவேண்டும். மற்றும் அவருடைய நமச்சிவாயப் பதிகத்தைச் " சொற்றுணை வேதியன் சோதிவானவன் " என்று துவக்கும் பாடல் முதல் விடிவதன்முன் பாராயணம் செய்தல் வேண்டும்.

" சொற்றுணை மாலைகொண்டு தொழுதெழுவார் கட்கெல்லாம்
நற்றுணையாவர் போலும் நாகவீச் சரவனாரே "

என்று அவர்களே பாடியிருத்தல் காணலாம்.

---

## "சித்தாந்த சிகாமணி"க்குப் பாராட்டு

சென்னை தியாகராய நகர்த் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தின்கண், நமது சமாஜத் துணைத்தலைவர் சித்தாந்த சிகாமணி திரு.க. வச்சிரவேல் முதலியார் பி.ஏ., எல்.டி. அவர்களால் இரண்டு ஆண்டுகளாக ஞாயிறுதோறும் நடத்தப்பெற்றுவந்த கந்தபுராண விரிவுரை நிறைவுவிழா 15–3–59

ஞாயிறன்று, அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் பி. ஏ., பி. எல். அவர்கள் தலைமையில் நடைபெற்றது. வித்துவான் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அனைவரையும் வரவேற்றார்கள். திரு அமைச்சர் அவர்கள் தம் தலைமையுரையில் நாம் புராணங்களைப் புறக்கணிக்காமல் தக்கவாறு போற்றவேண்டும் எனக் குறிப்பிட்டு, இரண்டு ஆண்டுகள் கந்தபுராண விரிவுரைகள் நிகழ்த்தி முடித்த சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்களைப் பாராட்டிப் பொன்னாடை போர்த்துச் சிறப்பித்தார்கள். விரிவுரையாளர் அவர்கள் ' வள்ளியம்மை திருமண வரலாறு ' கூறி முடித்தார்கள். சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி கனம் திரு. ஆர். சுப்பிரமணிய நாடார் பி.ஏ., பி எல். அவர்கள், உமர்கய்யாம் பாடல்கள் முதலியனவற்றை மேற்கோள் காட்டித் தெய்வநம்பிக்கையும் பக்தியும் இன்றியமையாதன என வற்புறுத்தி, ஸ்ரீலஸ்ரீ தம்பிரான் சுவாமிகள் இனி ஞாயிறு தோறும் தொடர்ந்து ஆற்ற இருக்கும் திருவிளையாடற்புராண விரிவுரையைத் தொடங்கி வைத்தார்கள். சுவாமிகள் " சத்தியாய்ச் சிவமாகி " எனத் தொடங்கும் முதற்பாடலைப் படித்துப் பொருள் விளக்கம் புரிந்தார்கள். திரு. பி. ஜி. கருத்திருமான் எம். எல். ஏ. அவர்கள், தமிழிலக்கியங்களின் சிறப்பினையும் தெய்வமணத்தினையும் வியந்து புகழ்ந்து கம்பராமாயணப் பாடல்கள் பலவற்றைக் கூறி விரித்துரைத்தார்கள்.

திரு. புலவர் முருகவேள் பி. ஓ. எல். (ஆனர்ஸ்)., எம். ஓ. எல். அவர்கள், புராணம் என்னும் சொற்கேட்டதுணையானே எவரும் ஏளனமாகக் கருதி விடுதல் கூடாது என்றும் ; " சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேதச் சிரப்பொருளை மிகத் தெளிந்தும் சென்றாற் சைவத் திறத்தடைவர் " என அருள் நந்தி சிவம் கூறியுள்ளார் என்றும்; புராணங்கள் நண்பர்களைப் போன்றவை(சஹ்ருத் சம்ஹிதா) என ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் கூறுவர் ; வின்சென்ட் ஏ. ஸ்மித், எப். ஈ. பேர்கிட்டர், ஜே. ஈ. ராப்சன் போன்ற புகழோங்கிய வரலாற்றறிஞர்கள் புராணங்களைப் போற்றியுள்ளனர் ; வின்சென்ட் ஏ. ஸ்மித் சாதவாகன

அரச பரம்பரையைப் பற்றி அறிய மச்சபுராணம் துணை புரிவதாகத் தெரிவித்துள்ளனர் என்றும்; உலகப் புகழ் பெற்ற ஜியார்ஜ் பெர்னார்டு ஷா, ஜவகர்லால் நேரு போன்ற முற்போக்காளர்களும் கூடப் புராணங்களை அறவே புறக்கணித்துவிடாமல் நாம் ஏற்றுபெற்றி போற்றலாம் எனத் தத்தம் நூல்களிற் குறிப்பிட்டுள்ளனர் என்றும்; கந்தபுராணம் 'சிறப்புடைய புராணங்களுள்' ஒன்று; "கந்தபுராணம் நமது சொந்த புராணம்" எனச் சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை பி.ஏ., எல். டி. அவர்கள் அதன் உட்பொருள் நுட்பங்களை விளக்குவர் என்றும்; சைவ சித்தாந்தக் கருத்துக்களுக்கு ஒரு பெருங் கருவூலமாக விளங்கும் கந்தபுராணம் குறித்துச் சைவ சித்தாந்தத் துறையில் "நூலாருள் நூல் வல்லார்" எனப் போற்றத் தக்கவகையிற் சிறந்து திகழும் "சித்தாந்த சிகாமணி" அவர்கள் விரிவுரை நிகழ்த்தியதும், ஆதீனத்தார் அவர்களைக்கொண்டு நிகழ்த்துவித்ததும் சாலப் பொருத்தம் என்றும்; மிக இளம்பருவ முதல் தமக்குச் சைவத் தமிழ்த் துறையில் ஓர் இனிய எடுத்துக்காட்டாக விளங்கி நலம்பல விளைத்துள்ளவர் "சித்தாந்த சிகாமணி" அவர்கள் ஆகலின், அவர்களைப் பாராட்டி மகிழ்தலில் நான் பெருமிதம் கொள்கின்றேன் என்றும் பேசி அவையினரை மகிழ்வித்தார். பின்னர் திரு. எம்.டி. தியாகராஜ பிள்ளை எம். எல். ஏ. அவர்களும் சில பாராட்டுரைகள் பகர்ந்தனர். ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் நன்றியுரை நவில, விழா இனிது நிறைவெய்தியது.

——

## மணி விழா

நமது சமாஜத்தின் செயலாளராக 1944—46-ஆம் ஆண்டுகளில் திகழ்ந்தவரும், நமது சமாஜத்தின் 39-ஆம் ஆண்டு நிறைவு விழா பள்ளத்தூரில் மிகவும் சிறப்பாகப் பெரிய அளவில் நடைபெறுதற்குக் காரணராகப் பிறங்கியவரும், சிதம்பரம் ஸ்ரீவில்லிபுத்தூர் பெரிய நாயக்கன்பாளை

யம் முதலிய இடங்களில் சமாஜத்தின் கோடை வகுப்புக்களை நன்கினிது நடைபெறச் செய்தவரும், 1942-ஆம் ஆண்டு சீர்காழியில் சைவ இளைஞர் மாநாட்டுக்குத் தலைமை தாங்கியவரும், தற்போது மலேயா நாட்டுக் கோலாலம்பூரில் தனவணிகர் துணைவராய் - வழக்கறிஞராய் - வருமானவரி நிபுணராய் இருந்துவருபவருமான உயர்திரு. கா. இராமநாதன் செட்டியார் பி.ஏ., பி.எல். அவர்களின் மணிவிழா 3–4–59 பழநியில் மிகவும் சிறப்புற நடைபெற்றது. மணிவிழாவுக்கு முன்னர்த் திரு. செட்டியார் அவர்கள், தம்முடன் வந்த மலேயா அன்பர்கள் பலருடன் இந்தியா முழுவதும் உள்ள முதன்மையான தலங்கள் பலவற்றிற்கும் யாத்திரை சென்று வழிபட்டு வந்தமை குறிப்பிடத் தக்கதாகும். மணிவிழாக் கொண்ட பெருந்தகையார் அவர்கள் நமது சமாஜத்தின்பாற் பெரிதும் ஈடுபாடு உடையவர்கள். சமாஜப் பொன்விழா மலரில் "பழைய நினைவுகள்" என நம் மணிவிழாத் தலைவர் அவர்கள் எழுதியுள்ள கட்டுரை, சமாஜ அன்பர்கள் பலரும் படித்துப் பயன்கொள்ளத் தகுவதாகும். இனைய பல சிறப்புமிக்க நம் சமாஜப் பேரன்பர்—சைவப் பெருந்தகையார் அவர்கள், பழநிப் பரமன் திருவருளால், சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கத் தொண்டாற்றும் வண்ணம், "ஒன்றுபத்து அடுக்கிய கோடி கடை இரீஇய பெருமைத் தாக" நீடிய ஆயுள் பெற்று, நிறைபல நலங்கள் எல்லாம் எய்தி இன்புற்று வாழ்க ! எனச் சமாஜம் வாழ்த்துரை கூறி மகிழ்கின்றது.

——

# திருவள்ளுவர் நினைவுநாள்

சென்னை, தியாகராயநகர்த் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தில் 28-2-59 அன்று மாலை 7 மணிக்குத் திருவள்ளுவர் நினைவுநாள், சைவ சித்தாந்த மகா சமாஜத் தலைவர் திரு. நல். முருகேச முதலியார் பி.ஏ., அவர்கள் தலைமையில் கொண்டாடப்பெற்றது. அவ்வமயம் விழாவைத் தொடங்கி வைத்த இலங்கை முன்னுளமைச்சர் திரு. சு. நடேசப்பிள்ளை அவர்கள் "திருக்குறள் தமிழர்களுக்குரிய அருந்தனம். அதில் சொல்லப்படாத விஷயம் இல்லை. தஞ்சை அரசவைப் புலவர் கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் கருத்திற்கிணங்க முன்னுளில் சென்னை மாநிலத்தின் தலைவராயிருந்த ஆங்கிலத் துரைமகனுர் திருக்குறளை முதலில் அச்சிட முன்வந்தார். அச்சியந்திரம் வந்தவுடன் முதன்முதலில் அச்சான நூல் திருக்குறளே. இம்மாதிரி நூல் வேறு எம்மொழியிலுமில்லை. இந்நூல் எந்நாட்டினருக்கும் எச்சமயத்தவருக்கும், எக்காலத்தவருக்கும் பயன் படுவதாகவுள்ளது. வாழ்க்கைக்கு மிக இன்றியமையாத ஒழுக்கம் பற்றித் தெளிவாகவும் விளக்கமாகவும் எடுத்துரைக்கிறது. மக்கள் ஒவ்வொருவரும் முக்கியமாக அரசியல் வாதிகளும் அவசியம் இவ் வற நூலைப் படித்து வாழ்க்கையில் பின்பற்ற வேண்டும். சமய நெறியைப் பரப்பும் செம்மையான தொண்டில் ஈடுபட்டிருக்கும் தருமையாதீன சமயப் பிரசார நிலையம் வள்ளுவர் நாளைக் கொண்டாடுவது மிகவும் பொருத்தமான ஒன்று என்று பாராட்டினர்.

விழாத் தலைவர், ஆராய்ச்சியாளருக்குப் பெரிதும் பயன்படும் வண்ணம் திருக்குறளின் பல பதிப்புக்களையும் பல மொழிபெயர்ப்புகளையும் தொகுத்துத் திருவள்ளுவர் நூல்நிலையம் ஒன்றைச் சென்னையில் நிறுவவேண்டுமென்றுர். பிறகு திரு. ம. பொ. சிவஞானம், திரு. கி. வா. ஜகந்நாதன் முதலியோர் பேசினர்கள். நிலையத் திருமுறைவகுப்பு ஆசிரியர் திரு. பி. சுவாமிநாதன் அவர்கள் குழுவினர் திருக்குறட் பாக்களை இன்னிசையுடன் ஓதினர்கள். நிலையத் தலைவர் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தொடக்கத்தில் வரவேற்புரையும், இறுதியில் நன்றியுரையும் கூறினர்கள். விழா இரவு 10 மணிக்கு இனிது நிறைவேறியது.

பற்ற திறமையும் பெற்று விளங்கினர்கள். பேராசிரியர் திரு. அ. ச. ஞானசம்பந்தனர் எம். ஏ. அவர்களின் அருமைத் தந்தையார் எனின், இவர்களின் பெருமையைப் பிறிதேதும் கூறி விளக்கவேண்டுவதில்லை. சமாஜச் சார்பில் முன்னர் வெளிவந்த திரு. கா. சு. பிள்ளை, எம்.ஏ., எம்.எல். அவர்களின் திருவாசக வுரையைப் பார்வையிட்டு, ஆங்காங்கே தமக்குத் தோன்றிய நயவுரை தெருட்டி யுதவிய நல்லறிஞர்களுள், நமது பெருஞ்சொல் விளக்கனர் ஒருவர். இவர்களின் நுண்மாண் நுழைபுலம் இனையது என்பதனைக் "கட்டுரைப் பூம்பொழில்" "அழதடி யடைந்த அன்பர்" என்னும் நூல்களால் அறியலாம். இத்தகைய சைவத் தமிழ்நலஞ் சான்ற பேரறிஞர், அண்மையில் மறைந்த செய்தி நம்மனோர்க்கெல்லாம் பெரிதும் வருத்தம் விளைப்பதொன்றாகும். அவர்தம் ஆருயிர் அம்பலவாணரின் திருவடிக்கீழ் அமைதியின்பம் ஆர்வதாக எனத் திருவருளை வாழ்த்துவதுடன், பேராசிரியர் திரு. அ. ச. ஞானசம்பந்தனர் அவர்களுக்கும் நம் ஆறுதலுரைகளைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

---

## புத்தக விலைப்பட்டி.

| | | ரூ. | ந.பை |
|---|---|---|---|
| பெரியபுராணம் | ... | 3 | 00 |
| திருப்போரூர்ச் சந்நிதிமுறை | ... | 0 | 75 |
| திருவெம்பாவை - திருப்பள்ளியெழுச்சி - சமாஜப் பொன்விழா வெளியீடு | ... | 1 | 00 |
| சமாஜப் பொன்விழா மலர் | ... | 0 | 50 |
| முருகன் முந்நூல் உரையுடன் | ... | 0 | 40 |
| ஞானியார் அடிகள் நினைவு மலர் | ... | 2 | 00 |
| சிவஞான போதம் (எளிய உரை) | ... | 0 | 12 |
| குகார்ச்சனைத் திருமந்திரம் | ... | 0 | 06 |
| அறுபத்துமூவர் | ... | 0 | 06 |

தபாற்கூலி, ரிஜிஸ்தர் செலவு வேறு.

| | | | |
|---|---|---|---|
| திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி(உரையுடன்) | | 0 | 05 |
| ,, நூறு பிரதிகள் பதிவுத் தபாற்கூலியுள்பட | | 6 | 25 |

**சைவ சித்தாந்த மகா சமாஜ புத்தக விற்பனை அலுவலகம்,**
28, இராமகிருஷ்ண மட் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4.

சைவ சித்தாந்த மகா சமாஜ உறுப்பினரும், இராயப் பேட்டை-ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் பெரும் ஈடுபாடுடையவரும், ஆறுமுகப் பெருமானிடத்து அயரா அன்பு பூண்டவரும், அடியார்களிடத்துப் பேரன்புடையவரும், திரு. இராஜா. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்களின் மனைவியாருமாகிய திருமதி. நீலாம்பிகை அம்மையார் அவர்கள் 16-3-59 அன்று இவ்வுலக வாழ்வை நீத்தமை குறித்துச் சமாஜத்தினர் தமது அநுதாபத்தை அவர்தம் கணவனுர்க்குத் தெரிவித்துக் கொள்வதோடு, அம்மையாரது ஆன்மா சாந்தியடையப் பாலசுப்பிரமணியப் பெருமானைப் பிரார்த்திக்கின்றனர்.

---

## சான்றோர் திருநட்சத்திரங்கள்

### நாயன்மார்

விகாரி ஆண்டு சித்திரைமீ

9உ (22-4-59) புதன்கிழமை—இசைஞானியார்—சித்திரை
10உ (23-4-59) வியாழக்கிழமை—
திருக்குறிப்புத்தொண்ட நாயனர்—சுவாதி
19உ (2-5-59) சனிக்கிழமை—திருநாவுக்கரசர்—சதயம்
24உ (7-5-59) வியாழக்கிழமை—சிறுத்தொண்டர்—பரணி
27உ (10-5-59) ஞாயிற்றுக்கிழமை—
மங்கையர்க்கரசியார்—ரோகிணி
29உ (12-5-59) செவ்வாய்க்கிழமை—விறல்மிண்டர்—
திருவாதிரை

### சந்தானகுரவர்

8உ (21-5-59) செவ்வாய்க்கிழமை—உமாபதிசிவம்—அஸ்தம்

### சைவப்பெரியார்

6உ (19-4-59) ஞாயிற்றுக்கிழமை—சிவஞானமுனிவர்—
ஆயில்யம்

Printed at the Sadhu Press, 15. Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi, Edited by Pulavar Murugavel, M.O L. & Published by S. Satchidanandam Pillai, B A:, L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.